30th January 1961]

*Cinchona Factory*

* 348 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether there is any proposal to convert the Cinchona Factory at Naduvattam (Nilgiris) into a factory for manufacturing medicines; and

(*b*) if so, the details thereof?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI N. K. PALANISAMI : இப்போது சிங்கோனா தொழிலில் நஷ்டம் இருப்பதால் அந்தத் தொழிற்சாலையை மூடிவிட்டு வேறு ஏதாவது மருந்து வகைகள், அல்லது வாசனை திரவியங்கள் உற்பத்தி செய்கின்ற வேலையை ஆரம்பிப்பதற்கு முயற்சி எடுக்கப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சிங்கோனா பயிரிடுவதிலோ அந்த தொழிற்சாலையை நடத்துவதிலோ நஷ்டம் இல்லை. இதற்கு முன்பு அதாவது யுத்த காலத்தில் அப்போதிருந்த அரசாங்கம் ஏராளமாக இதில் பணம் செலவு செய்துவிட்டார்கள். அந்தக் கடன் இப்போது நம் தலையில் இருப்பதாக கணக்கில் தெரிகிறது. இருந்தாலும், இப்போதும் நமக்கு கொயினின் தேவையாக இருக்கிறது. ஆகவே அதை அடியோடு நிறுத்திவிடுவதற்கில்லை. இதன் கீழேயே வேறு பல மருந்து செடிகளையும் பயிரிடுவதற்கு மத்திய அரசாங்க ஆராய்ச்சி ஸ்தாபனம் உதவி செய்துவருகிறது. அதனுடைய உதவியுடனும் ஒத்துழைப்புடனும் இம்மாதிரிப்பட்ட பல செடிகள் பயிரிடப்பட்டு வருகின்றன. மேலும் இது விரிவாக்கப்படும்.

SRI S. M. ANNAMALAI : ஸார், இந்த சிங்கோனா நிலங்களில் தேயிலை, காப்பி போன்றவைகளையும் பயிரிடலாம் என்று சர்க்கார் உத்தரவு பிறப்பித்திருப்பதற்கு என்ன காரணம் ? சிங்கோனா பயிரிடுவதில் நஷ்டமிருப்பதாக சொல்லப்படுவது உண்மையா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நஷ்டம் என்று சொல்வதைப்பற்றி நான் இப்போதுதான் விளக்கினேன். ஆனால், சிங்கோனா நமக்கு வேண்டியிருக்கிறது. நமக்கு அதிகமான அளவில் சிங்கோனா கிடைக்கிறது. ஆகவே இதோடு வேறு பல மருந்து செடிகளையும் பயிரிடலாம் என்பதுதான் அரசாங்கத்தின் முடிவு.